**स्तम्भौ स्थूणाजडीभावौ ..................**

1. स्तम्भः (पुं)

*1. ஸ்தம்ப: (பு-அ)* 1. கம்பம்

2. விழுந்து கிடக்கும் மரம் - இதன் ஆகு பெயராக மரம்போல்கிடந்தான் என்ற இடத்தில் ஸ்தம்ப: எனில் மனிதன் பேச்சுமூச்சற்றநிலையைக் குறிக்கும்

**....................... शम्भू ब्रह्मविलोचनौ ।**

1. शम्भूः (पुं)

*1. சம்பு: (பு-உ)* 1. பிர்மா 2. சிவன்

**कुक्षिभ्रूणार्भका गर्भाः ................**

1. गर्भः (पुं)

*1. கர்ப: (பு-அ)* 1. வயிறு

2. வயிற்றிலுள்ள குழந்தை

**...................... विस्रम्भः प्रणयेऽपि च ॥ 1336**

1. विस्रम्भः (पुं)

*1. விஸ்ரம்ப: (பு-அ)* 1. பரிசயம்

*ரக்தா (பெ-ஆ)* 2. ப்ரணயகலகம்

(காதலர்களுக்கு இடையே யேற்பட்ட சிறு பிணக்கு)

3. விச்வாசம்

4. இம்சித்தல்

**स्याद् भेर्यां दुन्दुभिः पुंसि स्यादक्षे दुन्दुभिः स्त्रियाम् ।**

1. दुन्दुभिः (पुं)

*1. துந்துபி: (பு-அ) 1. பேரி*
*துந்துபீ (பெ-ஈ) 2. பகடை ஆட்டத்தில் உயர்ந்த பந்தயம்*

**स्यान्महारजने क्लीबं कुसुम्भं करके पुमान् ॥ 1337**

1. कुसुम्भं (पुं/न)

*1. குஸும்பம் (பு-அ) 1. கமண்டலம்*
*(ந-அ) 2. பூக்களில் காணப்படும் மகரந்த கேசரங்கள்/நாளங்கள்*

**क्षत्रियेऽपि च नाभिर्ना ..................**

1. नाभिः (पुं), 2. नाभी (स्त्री)

*1. நாபி: (பு-இ) 1. க்ஷத்திரியன், 2.ஓய்வுபெற்ற ராஜா*
*நாபீ (பு/பெ-ஈ) 3. தொப்புள்*
*நாபி (பெ-இ) 4. கஸ்தூரி 5. வண்டிச் சக்ரத்தின் மையத்திலுள்ள குடம்*

**..............................सुरभिर्गवि च स्त्रियाम् ।**

1. सुरभिः (पुं)

*1. ஸுரபி: (பு-இ) 1. பசு, காமதேனு*
*ஸுரபீ (பு/பெ/ந) 2. நறுமணமுள்ளது*
*3. மனோஹரமானது*

**सभा संसदि सभ्ये च .......................**

1. सभा (स्त्री)

*1. ஸபா (பெ-அ) 1. ஆஸ்தானம்*
*2. ரசிகன்*
*3. கூட்டம்*
*4. வழி*
*5. சூதாட்டம்*

**.......................... त्रिष्वध्यक्षेऽपि वल्लभः ॥ 1338**

1. वल्लभः (पुं/स्त्री/न)

**1. வல்லப: (பு/பெ/ந-அ) 1. தலைமைதாங்குபவன்**
**2. ப்ரியமானது**

"ப$_4$" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை

-------S-------

## अथ मान्तवर्गः

**ம வில் முடியும் சொற்கள்**

**किरणप्रग्रहौ रश्मी ...............**

1. रश्मिः (पुं)

**1. ரச்மி: (பு-இ) 1. கிரணம்**
**2. க்ஷயரோகம்**
**3. கடிவாளம் என்றும் சிலர்**

**.......................... कपिभेकौ प्लवङ्गमौ ।**

1. प्लवङ्गः (पुं)

**1. ப்லவங்க: (பு-அ) 1. குரங்கு 2. தவளை**

**इच्छामनोभवौ कामौ .................**

1. कामः (पुं)

**1. காம: (பு-அ) 1. ஆசை**
**காம (ந-அ) 2. மன்மதன்**
**3. மிகவும்**

**.......................... शौर्योद्योगौ पराक्रमौ ॥ 1339**

1. पराक्रमः (पुं)

**1. பராக்ரம: (பு-அ) 1. சாமர்த்தியம்**
**2. வேலை/பணி**
**3. செய்யத்தக்கவேலையைத் தொடங்குதல்**

**धर्माः पुण्ययमन्यायस्वभावाचारसोमपाः ।**

1. धर्मः (पुं)

***1. தர்மः (பு-அ) 1. புண்யம் 2. யமன் 3. நீதி 4. ஸ்வபாவம் 5. ஸோமயாஜி 6. ஆசாரம்***

**उपायपूर्व आरम्भ उपधा चाप्युपक्रमः ॥ 1340**

1. उपक्रमः (पुं)

***1. உபக்ரமः(பு-அ)1. தன்மையறிந்து ஆரம்பித்தல்***
***2. மந்திரி முதலானவர்களைசோதித்தல்***
***3. 'இது முதல்' என்று கூறுதல். (இது அபி என்ற சொல்லால் கொள்ளப்பட்டது)***

**वणिक्पथः पुरं वेदो निगमा ................**

1. निगमः (पुं)

***1. நிகமः(பு-அ) 1. கடைத்தெரு***
***2. பட்டணம்***
***3. வேதம்***

**..............................नागरो वणिक् ।**

**नैगमो द्वौ .....................**

1. नैगमः (पुं)

***1. நைகமः (பு-அ) 1. பட்டணத்தில் வாழ்பவன்***
***2. வர்த்தகன்***

**...............बले रामो लीनचारुसिते त्रिषु ॥ 1341**

1. रामः (पुं/स्त्री/न)

***1. ராமः (பு-அ) 1. பலராமன்***

***ராமா (பெ-ஆ) 1. கருப்பானது 2. அழகானது***
***ராம (ந-அ) 3. நீலம் 4. வெறுமை***

***அமர.6-8***

**शब्दादिपूर्वो वृन्देऽपि ग्रामः .............**

1. ग्रामः (पुं)

***1. க்ராம: (பு-அ)*** **1. 'ஆதி'-முதலான பொருட்கள்/ சப்தங்கள் என்ற பொருளில் शब्दग्रामः, गुणग्रामः உதாரணமாகக் கொள்க**

**2. கிராமம்/ஊர். அதிலுள்ள அனைத்தும் என்று வரும் - இது, அபி என்ற சொல்லால் கொள்ளப்பட்டது.**

**..........................क्रान्तौ च विक्रमः ।**

1. विक्रमः (पुं)

***1. விக்ரம: (பு-அ)*** **1. ஆக்கிரமித்தல்**

**2. பராக்கிரமம் - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது**

**स्तोमः स्तोत्रेऽध्वरे वृन्दे ...............**

1. स्तोमः (पुं)

***1. ஸ்தோம: (பு-அ)*** **1. ஸ்தோத்திரம்**

**2. யாகம்**

**3. கூட்டம்/ஸமூஹம்**

**..................जिह्मस्तु कुटिलेऽलसे ॥ 1342**

1. जिह्मः (पुं)

***1. ஜிஹ்ம: (பு-அ)*** **1. கோணல்**

**2. மந்தமானது**

**गुल्मा रुक्स्तम्ब सेनाश्च .............**

1. गुल्मः (पुं)

***1. குல்ம: (பு-அ)*** **1. குன்மரோகம்(வயிற்றுவலி)**

**2. புதறு**

**3. சேனையின் ஒருவகை**

**........................ जामिः स्वसृकुलस्त्रियोः ।**

1. जामिः (स्त्री)यामिः என்றும் பாடமுண்டு

*1. ஜாமி: (பெ-இ)* **1. உடன் பிறந்தவள்.**
**2. நற்குலப்பெண்**

जामि (अव्ययं) **3. சோம்பேரித்தனம்**

**क्षितिक्षान्त्योः क्षमा युक्ते क्षमं शक्ते हिते त्रिषु ॥** 1343

1. क्षमा (पुं/स्त्री/न)

***1. க்ஷமா (பு/பெ/ந-அ)1. பூமி***
***2. பொறாமை (எனில்- பெ)***
***3. சரியானது (எனில்- ந)***
***4. சாமர்த்தியம் (எனில்)(பு/பெ/ந)***
***5. ஹிதஞ்செய்பவன் எனில்(பு/பெ/ந)***

**त्रिषु श्यामौ हरित्कृष्णौ श्यामा स्याच्छारिवा निशा ।**

1. श्यामः (पुं/स्त्री/न)

***1. ச்யாம: (பு-அ)*** ***1. பசுமையானது***
***ச்யாமா (பு/பெ/ந-ஆ)*** ***2. கறுப்பானது***
***3. நறுமணம்***
***4. இரவு***

**ललामं पुच्छपुण्ड्राश्वभूषा प्राधान्यकेतुषु ॥** 1344

1. ललामं (न-न्), ललाम (पाठं)

***1. லலாமம் (ந-ந்)*** ***1. வால்***
***லலாம (பாடம்)(ந-அ)*** ***2. நெற்றித்திலகம்***
***3. குதிரையின் அணிகள்***
***4. குதிரை***
***5. ஆபரணங்கள்***
***6. முக்கியமானது***
***7. கொடி***

**सूक्ष्ममध्यात्ममप्या ....................**

1. सूक्ष्म (पुं/स्त्री/न)

***1. ஸூக்ஷ்ம (பு/பெ/ந-அ) 1. பரமாத்மா***
***2. மிகவும் சிறியது***

**............................ दौ प्रधाने प्रथमं त्रिषु ।**

1. प्रथमं (पुं/स्त्री/न)

***1. ப்ரதம: (பு-அ) 1. முதல் 2. முக்கியமானது***
***ப்ரதமா (பெ-ஆ)***
***ப்ரதமம் (ந-ஆ)***

**वामौ वल्गुप्रतीपौ द्वौ ......................**

1. वामः (पुं/स्त्री/न)

***1. வாம: (பு/பெ/ந-அ) 1. மனோஹரமானது***
***2. எதிரிடையானது***

**............................अधमौ न्यूनकुत्सितौ ॥ 1345**

1. अधमः (पुं/स्त्री/न)

***1. அதம: (பு-அ) 1. குறைச்சலானது***
***அதமா (பெ-ஆ) 2. நிந்திக்கப்பட்டது***
***அதமம் (ந-அ)***

**जीर्णं च परिभुक्तं च यातयाममिदं द्वयम् ।**

1. यातयामं (पुं/स्त्री/न)

***1. யாதயாம: (பு-அ) 1. செரித்தல்/ஜீர்ணமாதல்***
***யாதயாமா(பெ-ஆ) 2. அனுபவிக்கப்பட்டது***
***யாதயாமம் (ந-அ)***

**"ம" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை**



## अथ यान्तवर्गः

***ய வில் முடியும் சொற்கள்***

**तुरङ्गगरुडौ तार्क्ष्यौ ......................**

1. तार्क्ष्यः (पुं)

***1. தார்க்ஷ்ய: (பு-அ) 1. குதிரை***
***2. கருடன்***

**......................निलयापचयौ क्षयौ ॥ 1346**

1. क्षयः (पुं)

***1. க்ஷய: (பு-அ) 1. வீடு***
***2. அழிவு (நாசம்)***

**श्वशुर्यौ देवरश्यालौ ......................**

1. श्वशुर्यः (पुं)

***1. ச்வசுர்ய: (பு-அ) 1. கணவனுடன் பிறந்தவன்***
***2. மனைவியின் உடன் பிறந்தவன்***

**......................भ्रातृव्यौ भ्रातृजद्विषौ ।**

1. भ्रातृव्यः (पुं)

***1. ப்ராத்ருவ்ய: (பு-அ) 1. உடன் பிறந்தவனின் மகன்***
***2. பகையாளி***

**पर्जन्यौ रसदब्देन्द्रौ....................**

1. पर्जन्यः (पुं)

***1. பர்ஜன்ய: (பு-அ) 1. இடிக்கும் மேகம்***
***2. இந்திரன்***

**......................स्यादयः स्वामिवैश्ययोः ॥ 1347**

1. अर्यः (पुं)

*1. அர்ய: (பு-அ) 1. மதிப்பிற்குரியவன் (ப்ரபு)*
*2. வைச்யன்*

**तिष्यः पुष्पे कलियुगे ......................**

1. तिष्यः (पुं)

*1. திஷ்ய: (பு-அ) 1. புஷ்ய நடசத்திரம் - பூசம்*
*2. கலியுகம்*

**...................पर्यायोऽवसरे क्रमे ।**

1. पर्यायः (पुं)

*1. பர்யாய: (பு-அ) 1. அவஸரம் - சமயம்*
*2. வரிசை*

**प्रत्ययोऽधीनशपथज्ञानविश्वासहेतुषु ॥ 1348**
**रन्ध्रे शब्दे .........................**

1. प्रत्ययः (पुं)

*1. ப்ரத்யய: (பு-அ)1. ஆதீனம் 2. ஆணை 3. அறிவு*
*4. நம்பிக்கை 5. ஹேது 6.இடைவெளி*
*7. 'க்ருத்' முதலிய ப்ரத்யயங்கள்*

**..................... अथानुशयो दीर्घद्वेषानुतापयोः ।**

1. अनुशयः (पुं)

*1. அனுசய: (பு-அ) 1. நீண்ட துவேஷம்*
*2. பச்சாதாபம்*

**स्थूलोच्चयस्त्वसाकल्ये गजानां मध्यमे गते ॥ 1349**

1. स्थूलोच्चयः (पुं)

*1. ஸ்தூலோச்சய: (பு-அ) 1. முழுமையடையாதிருத்தல்*
*2. யானையின், விரைவாகவோ மந்தமாகவோ இல்லா சீரான நடை*

**समयाः शपथाचारकालसिद्धान्तसंविदः ।**

1. समयः (पुं)

***1. ஸமய: (பு-அ) 1. ஆணை - சத்தியம் 2. ஆசாரம் 3. காலம் 4. சித்தாந்தம் 5. ஞானம்***

**व्यसनान्यशुभं दैवं विपदित्यनयास्त्रयः ॥ 1350**

1. अनयः (पुं)

***1. அநய: (பு-அ) 1. துன்பங்கள் (துன்பங்களை விளைவிக்கும் சூதாட்டம்போன்றவை)***
***2. முன்வினையின் காரணமானவை***
***3. விபத்து/ஆபத்து***

**अत्ययोऽतिक्रमे कृच्छ्रे दोषे दण्डेऽपि................**

1. अत्ययः (पुं)

***1. அத்யய: (பு-அ) 1. அதிக்ரமம் செய்தல்***
***2. துக்கம் 3. தோஷம்***
***4. தண்டித்தல் 5. சர்வநாசம்***
***-இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

**...................................... अथापदि ।**

**युद्धायत्योः संपरायः ......................**

1. संपरायः (पुं) (सांपरायः)என்றும் பாடம்

***1. ஸம்பராய:(பு-அ) 1. ஆபத்து 2. போர் 3.எதிர்காலம்***

**........................पूज्यस्तु श्वशुरेऽपि च ॥ 1351**

1. पूज्यः (पुं)

***1. பூஜ்ய: (பு-அ) 1. மாமனார் 2. பூஜைக்குரியவர்***

**पश्चादवस्थायिबलं समवायश्च संनयौ ।**

1. संन्नयौ (पुं)

**1. ஸந்நயௌ (பு-ஔ)** 1. பின்னுள்ள சேனை
2. மொத்த ஸமூஹம்
3. தொடர்பு. 'ச' என்றதால் கொள்ளப்பட்டது

**संघाते संन्निवेशे च संस्त्यायः ..................**

1. संस्त्यायः (पुं)

**1. ஸம்ஸ்த்யாய: (பு-அ)** 1. ஸமூஹம்
2. ஊரைச் சுற்றியுள்ள வெளி
3. இல்லம் 'ச'காரத்தால் பெறப்பட்டது

**...................................प्रणयास्त्वमी** ।। 1352

**विश्रम्भयाञ्चाप्रेमाणो ......................**

1. प्रणयः (पुं)

**1. ப்ரணய: (பு-அ)** 1. விச்வாசம்
2. செவியால் கேட்குதல்
3. ப்ரேமை

**...............................विरोधेऽपि समुच्छ्रयः ।**

1. समुच्छ्रयः (पुं)

**1. ஸமுச்ரய: (பு-அ)** 1. பகைமை, வைரம்
2. உயரம் - அபி என்ற சொல்லால் பெறப்பட்டது

**विषयो यस्य यो ज्ञातः ..................**

1. विषयः (पुं)

***1. விஷய: (பு-அ)*** **1. எதனால் எது தினமும்தொடர்பு கொண்டிருக்குமோ அது**
**2. ஐம்புலன்களால் அறியப்படும் பொருள்**
**3. தேசம்-அபி சப்தத்தால்பெறப்பட்டது**

**निर्यासेऽपि कषायोऽस्त्री ....................**

1. कषायः (पुं/न)

***1. கஷாய: (பு/ந-அ)*** **1. கஷாயம் 2. துவர்ப்பு**
**3. மைபூசுதல் 4. பரிமள சுகந்தம்**

**........................ सभायां च प्रतिश्रयः ।**

1. प्रतिश्रयः (पुं)

***1. ப்ரதிச்ரய: (பு-அ)*** **1. சபை**
**2. இருப்பிடம்/வீடு - இது சகரத்தால் பெறப்பட்டது**

**प्रायो भूम्न्यन्तगमने ..................**

1. प्रायः (पुं)

***1. ப்ராய: (பு-அ)*** **1. பெரும்பாலும்/உத்தேசம்**
**2. சாகும்வரை உண்ணாவிரதம்/ வடக்கிருத்தல்**
**3. ஸமாஸத்தில் உத்தரபதமாய், ஸத்ருச அர்த்தத்திற்கும் (இளையதான) பெயர்**

**...................... मन्युर्दैन्ये क्रतौ क्रुधि ॥ 1354**

1. मन्युः (पुं)

***1. மன்யு: (பு-உ)*** **1. தீனமானது 2. யாகம் 3. கோபம்**

**रहस्योपस्थयोर्गुह्यं ..........................**

1. गुह्यं (पुं)

***1. குஹ்யம் (பு/பெ/ந-அ)*** ***1. ரஹஸ்யம் மறைக்கத்தக்கது***
***குஹ்யம் (ந-அ)*** ***2. ஆண், பெண் குறிகள்***
***3. ஆமை***

.................... **सत्यं शपथतथ्ययोः।**

1. सत्यं (न)

***1. ஸத்யம் (ந-அ)*** ***1. ஆணை***
***ஸத்ய:(பு/பெ/ந-அ)*** ***2. உண்மை***
***3. யுகங்கள், உலகங்கள் (ஸத்யலோகம்) என்று சிலர்***

**वीर्यं बले प्रभावे च** ..................

1. वीर्यं (न)

***1. வீர்யம் (ந-அ)*** ***1. பலம் 2. பொருட்களின் சக்தி***
***3. இந்திரியம்/ரேதஸ் - சகாரத்தால் பெறப்பட்டது***

........................ **द्रव्यं भव्ये गुणाश्रये** ॥1355

1. द्रव्यं (न)

***1. த்ரவ்யம் (ந-அ)*** ***1. நல்ல/சிறந்த பொருட்கள்***
***2. நற்குணமுள்ள வஸ்த்து***
***3. பாக்கியவான், யோக்கியவான் என்று சிலர்***

**धिष्ण्यं स्थाने गृहे भेऽग्नौ** .................

1. धिष्ण्यं (पुं)

***1. திஷ்ண்யம் (பு-அ)*** ***1. இடம் 2. வீடு 3. நக்ஷத்திரம்***

............................... **भाग्यं कर्म शुभाशुभम्।**

1. भाग्यं (न)

***1. பாக்யம் (ந-அ) 1. சுபகர்மா***
***2. அசுப கர்மா***

**कशेरुहेम्नोर्गाङ्गेयं ....................**

1. गाङ्गेयं (न)

***1. காங்கேயம் (பு-அ) 1. தாமரைக்கிழங்கு***
***2. தங்கம்***

**.................... विशल्या दन्तिकापि च ॥** 1356

1. विशल्या (स्त्री)

***1. விசல்யா (பெ-ஆ) 1. நாகதந்திச்செடி***
***2. கொம்மட்டிச்செடி. அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

**वृषाकपायी श्रीगौर्योः .....................**

1. वृषाकपायी (स्त्री)

***1. வ்ருஷாகபாயீ (பெ-ஈ) 1. லக்ஷ்மீ***
***2. பார்வதி***

**........................ अभिख्या नामशोभयोः ।**

1. अभिख्या (स्त्री)

***1. அபிக்யா (பெ-ஆ) 1. பெயர் 2. ஒளி/காந்தி***

**आरम्भो निष्कृतिः शिक्षा पूजनं संप्रधारणम् ॥** 1357

**उपायः कर्म चेष्टा च चिकित्सा च नव क्रियाः ।**

1. क्रिया (स्त्री)

**1. க்ரியா (பெ-ஆ)** 1. உத்யோகம்/வேலை
2. ப்ராயச்சித்தம்
3. சிக்ஷா (வேதத்தின் ஆறு அங்கங்களில் ஒன்று)
4. பூஜை
5. ஆதாரம்/சான்று
6. உபாயம் (சாம, தான, பேத, தண்டம் என்ற நான்குவித உபாயம்)
7. அறிவுபூர்வமான செயல்
8. வைத்தியம்
9. செயல்

## छाया सूर्यप्रिया कान्तिः प्रतिबिम्बमनातपः ॥ 1358

1. छाया (स्त्री)

**1. சாயா (பெ-ஆ)** 1. சூரியனின் மனைவியின் பெயர்
2. ஒளி
3. பிரதிபிம்பம்
4. நிழல்

## कक्ष्या प्रकोष्ठे हर्म्यादेः काञ्च्यां मध्येभबन्धने ।

1. कक्ष्या (स्त्री)

**1. கக்ஷ்யா (பெ-ஆ)** 1. உப்பரிகை (அரண்மனையில் மாடி)
2. அரண்மனையின் அங்கணம்
3. அரை நூல் மாலை
4. யானை வயிற்றில் கட்டும் பட்டை

## कृत्या क्रियादेवतयोस्त्रिषु भेद्ये धनादिभिः ॥ 1359

1. कृत्या (स्त्री)

**1. க்ருத்யா (பெ-ஆ)** 1. செய்தல் 2. தேவதா விசேஷம்
**க்ருத்யா(பு/பெ/ந-அ)** 3. செல்வத்தால் பேதம் செய்து நாட்டை அபகரித்தல்

**जन्यः स्याज्जनवादेऽपि ....................**

1. जन्यः (पुं/स्त्री/न)

***1. ஜந்ய: (பு-அ)*** **1. உலகின் அபவாதம்**
***ஜன்யா (பெ-ஆ)*** **2. யுத்தம்**
***ஜன்யம் (ந-அ)*** **3. கைப்பற்றுதல்**
***ஜன்ய: (பு-அ)*** **4. மாப்பிள்ளைதோழன்**
**5. மணப்பெண்ணின் தோழிகள்**
**6. தந்தை**

**......................... जघन्योऽन्तेऽधर्मेऽपि च ।**

1. जघन्यः (पुं/स्त्री/न)

***1. ஜகன்ய: (பு-அ)*** **1. பின்பிறந்தவன்**
***ஜகன்யா(பெ-ஆ)*** **2. அதமன்/மட்டமான குணம் படைத்தவன்**
***ஜகன்யம் (ந-அ)*** **3. வால், குளம், குறி இவைகள் 'அபி' என்ற சொல்லால்பெறப்பட்டது**

**गर्ह्याधीनौ च वक्तव्यौ ....................**

1. वक्तव्यः (पुं/स्त्री/न)

***1. வக்தவ்ய: (பு-அ)*** **1. கீழ்மகன்**
***வக்தவ்யா(பெ-ஆ)*** **2. சொல்படி கேட்பவன்**
***வக்தவ்யம் (ந-அ)*** **3. பேசத்தக்க சொற்கள் - இது 'ச'காரத்தால் பெறப்பட்டது**

**.......................... कल्यौ सज्जनिरामयौ ॥ 1360**

1. कल्यः (पुं/स्त्री/न)

***1. கல்ய: (பு-அ)*** **1. உழைப்பால் பெற்ற பொருள்**
***கல்யா (பெ-ஆ)***
***கல்யம் (ந-அ)*** **2. நோயுற்றது**

**आत्मवाननपेतोऽर्थादर्थ्यौ..........**

1. अर्थ्यः (पुं/स्त्री/न)

**1. அர்த்ய: (பு-அ) 1. அறிவுள்ளவன்**
**அர்த்யா(பெ-ஆ) 2. பொருளை விரும்பி இடைவிடாதவன்**
**அர்த்யம் (ந-அ)**

**.................................. पुण्यं तु चार्वपि ।**

1. पुण्यं (न)

**1. புண்யம் (ந-அ) 1. அழகியவை**
**2. ஸுக்ருதம் - நற்செயல்/அபி என்ற சொல்லால் பெறப்பட்டது**

**रूप्यं प्रशस्ते रूपेऽपि .............**

1. रूप्यं (पुं/स्त्री/न)

**1. ரூப்ய: (பு-அ) 1. அழகானது**
**ரூப்யா(பெ-ஆ)**
**ரூப்யம் (ந-அ) 2. முத்திரை போடப்பட்ட தங்கம், (அரசாங்க முத்திரை போடப்பட்ட தங்கக்காசு, வெள்ளிக்காசுகளை ரூப்யா என்று அழைத்தனர். அது இன்று வரை தொடர்கிறது)**

**........................... वदान्यो वल्गुवागपि ॥ 1361**

1. वादान्यः (पुं/स्त्री/न)

**1. வதாந்ய: (பு-அ) 1. சிறந்த சொற்களைப் பேசுபவன்**
**வதாந்யா (பெ-ஆ)**
**வதாந்யம் (ந-அ) 2. கொடையாளி/வள்ளல் - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது.**

**न्यायोऽपि मध्यं .....................**

1. मद्यः (पुं/स्त्री/न)

*1. மத்ய: (பு-அ) 1. உசிதமானது/தகுதியானது*
*மத்யா (பெ-ஆ)*
*மத்யம் (ந-அ)*
*மத்ய: (பு-அ) 2. இடுப்பு*
*மத்யம் (ந-அ)*

**........................ सौम्यं तु सुन्दरे सोमदेवते ।**

1. सौम्यः (पुं/स्त्री/न)

*1. ஸௌம்ய: (பு-அ) 1. மனங்கவர்ந்தது*
*ஸௌம்யா(பெ-ஆ)*
*ஸௌம்யம் (ந-அ) 2. ஸோமனை தேவதையாகக் கொண்ட ஹவிஸ் ஸூக்தம் என்பது லிங்கபட்டீயம்*

"ய" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை

-------§-------

**अथ रान्तवर्गः**

***ர வில் முடியும் சொற்கள்***

**निवहावसरौ वारौ ....................**

1. वारः (पुं)

*1. வார: (பு-அ) 1. ஸமூஹம்*
*2. நிலை/ அவஸரம்*

**.................... संस्तरौ प्रस्तराध्वरौ ॥** 1362

1. संस्तरः (पुं)

*1. ஸம்ஸ்தர: (பு-அ) 1. தருப்பைப் புல்லால் செய்யப்பட்ட படுக்கை*
*2. யாகம்*

**गुरू गीर्पतिपित्राद्यौ ....................**

1. गुरुः (पुं)

***1. குரு: (பு-உ) 1. பிரஹஸ்பதி***
***2. தகப்பனார் முதலிய பெரியோர்***
***3. கனமான பொருள்***

**........................ द्वापरौ युगसंशयौ ।**

1. द्वापरः (पुं)

***1. த்வாபர: (பு-அ) 1. மூன்றாம் யுகம்***
***2. சந்தேஹம்***

**प्रकारौ भेदसादृश्य ................**

1. प्रकारः (पुं)

***1. ப்ரகார: (பு-அ) 1. பேதம் / பிரித்தல்***
***2. ஒப்புமை***

**.......................... आकाराविङ्गिताकृती ॥ 1363**

1. आकारः (पुं)

***1. ஆகார: (பு-அ) 1. ஆமோதித்தல் அல்லது நிராகரித்தலான செய்கையை குறிப்பிடும் முகக்குறிப்பு***

**किंशारू धान्यशूकेषू ................**

1. किंशारुः (पुं)

***1. கிம்சாரு: (பு-ஊ) 1. தானியங்களில் காணப்படும் முள்/கூர்மை***
***2. பாணம்***

**.............. ...........मरू धन्वधराधरौ ।**

1. मरुः (पुं)

*1. மரு: (பு-உ)* *1. நீரின்றியுள்ள நிலம்*
*2. பர்வதம்*

**अद्रयो द्रुमशैलार्काः ..............................**

1. अद्रिः (पुं)

*1. அத்ரி: (பு-இ)* *1. மரம்*
*2. பர்வதம் - குன்று*
*3. சூரியன்*

**.....................स्त्रीस्तनाब्दौ पयोधरौ ॥ 1364**

1. पयोधरः (पुं)

*1. பயோதர: (பு-அ)* *1. பெண்களின் ஸ்தநம்/நகில்*
*2. மேகம்*

**ध्वान्तारिदानवा वृत्रा ....................**

1. वृत्रः (पुं)

*1. வ்ருத்ர: (பு-அ)* *1. இருள்*
*2. எதிரி*
*3. வ்ருத்திராசுரன்*

**.............................बलिहस्तांशवः कराः ।**

1. कराः (पुं)

*1. கரா: (பு-அ)* *1. கப்பம்*
*2. கை*
*3. கிரணம்*

**प्रदरा भङ्गनारीरुग्बाणा ..................**

1. प्रदरः (पुं)

*1. ப்ரதர: (பு-அ)* *1. ஒடித்தல்*
*2. பெண்களின் உதிரப்போக்கு*
*(பெரும்பாடு)*
*3. அம்பு*

.......................... अस्राः कचा अपि ॥ 1365

1. अस्राः (पा) अस्रः (पुं)

***1. அஸ்ரா: (பாடம்) அஸ்ர: (பு-அ) 1. முடி***
***அஸ்ர: (ந-அ) 2. ரக்தம் 3. கண்ணீர்***

अजातशृङ्गो गौः कालेऽप्यश्मश्रुर्ना च तूबरौ ।

1. तूबरः (पुं)

***1. தூபர: (பு-அ) 1. உரிய காலத்தில் கொம்பு வளராத எருது***
***2. மீசை முளைக்காத ஆண் மகன்***

स्वर्णेऽपि राः ......................

1. राः (पुं)

***1. ரா: (பு-அ) 1. தங்கம்***
***2. பொருள் - இது அபி என்பதால் கொள்ளப்பட்டது***

......................... परिकरः पर्यङ्कपरिवारयोः ।

1. परिकरः (पुं)

***1. பரிகர: (பு-அ) 1. கட்டில் 2.. பரிவாரங்கள்***

मुक्ताशुद्धौ च तारः स्यात् ................

1. तारः (पुं)

***1. தார: (பு-அ) 1. குற்றமற்ற முத்துச்சிப்பி***
***2. நக்ஷத்திரம்***
***தாரா (பெ-ஆ) 3. கருவிழி***
***தார: (பு-அ) 4. பேரோசை***
***தாரா (பெ-ஆ)***
***தாரம் (ந-அ)***

.......................शारो वायौ स तु त्रिषु ।

कर्बुरे ..........................

1. शारः (पुं)

*1. சார: (பு-அ)* *1. வாயு/காற்று*
*சாரா (பெ-ஆ)*
*சாரம் (ந-அ)*

..............अथ प्रतिज्ञाजिसंविदापत्सु संगरः ॥ 1367

1. सङ्गरः (पुं)

*1. ஸங்கர: (பு-அ)* *1. ப்ரதிக்ஞை* *2. யுத்தம்*
*3. உறுதியான செயல்* *4. ஆபத்து*

वेदभेदे गुप्तिवादे मन्त्रो ..........

1. मन्त्रः (पुं)

*1. மந்த்ர: (பு-அ)* *1. காயத்ரி போன்ற வேதமந்திரங்கள்*
*2. ரஹஸ்ய ஆலோசனை*

..................................मित्रो रवावपि ।

1. मित्रः (पुं)

*1. மித்ர: (பு-அ)* *1. சூரியன்*
*மித்ரம் (ந-அ)* *2. நண்பன்*

मखेषुयूपखण्डेऽपि स्वरुः ..................

1. स्वरुः (पुं)

*1. ஸ்வரு: (பு-உ)* *1. யாகம்* *2. பாணம்*
*3. யூபஸ்தம்பத்தின் துணுக்கு*
*4. வஜ்ராயுதம் - இது அபி என்ற*
*சொல்லால் பெறப்பட்டது*

........................गुह्योऽप्यवस्करः ॥ 1368

1. व्यवस्करः (पुं)

**1. வ்யவஸ்கர: (பு-அ) 1. ஆண் பெண்களின் ரஹஸ்யம்**
**2. மலம் - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது**
**3. கழுநீர் பானையின் கீழுள்ள குழம்பு**

**आडम्बरस्तूर्यरवे गजेन्द्राणां च गर्जिते ।**

1. आडम्बरः (पुं)

**1. ஆடம்பர: (பு-அ) 1. வாத்தியங்களின் பேரொலி**
**2. யானைகளின் பிளிரல்கள்**
**3. பரபரப்பு**

**अभिहारोऽभियोगे च चौर्ये संनहनेऽपि ॥ 1369**

1. अभिहारः (पुं)

**1. அபிஹார: (பு-அ) 1. கவரவேண்டும் என்று எண்ணி ஆக்ரமித்தல்**
**2. திருட்டு**
**3. ஆயத்தப்படுத்தல்**

**स्याज्जङ्गमे परीवारः खड्गकोशे परिच्छदे ।**

1. परीवारः (पुं)

**1. பரீவார: (பு-அ) 1. திரிகின்ற மனிதன்**
**2. கத்தி உரை**
**3. சுற்றியுள்ள வேலைக்காரர்கள்**

**विष्टरो विटपी दर्भमुष्टिः पीठाद्यमासनम् ॥ 1370**

1. विष्टरः (पुं)

**1. விஷ்டர: (பு-அ) 1. மரம் 2. தர்பைக்கொத்து/ முஷ்டி**
**3. மனைப்பலகை போன்ற ஆஸநம்**

**द्वारि द्वाःस्थे प्रतीहारः प्रतीहार्यप्यनन्तरे ।**

1. प्रतीहारः (पुं)

**1. ப்ரதீஹார: (பு-அ) 1. வாசற்படி 2. வாயிற்காப்போன்**
**ப்ரதீஹாரி (பு-ந்) வாயிற்காப்போன்**
**ப்ரதீஹாரிணீ (ந-அ) பெண் - வாயில் காப்பவள்**

**विपुले नकुले विष्णौ बभ्रुः स्यात् पिङ्गले त्रिषु ॥ 1371**

1. बभ्रुः (पुं)

**1. பப்ரு: (பு-உ) 1. பெரிய கீரிப்பிள்ளை**
**2. விஷ்ணு**
**பப்ரு: (பு-உ) 3. பச்சைவண்ணம்**
**(பெ-உ) ,,**
**(ந-அ) ,,**

**सारो बले स्थिरांशे च न्याय्ये क्लीबं वरे त्रिषु ।**

1. सारः (पुं)

**1. ஸார: (பு-அ) 1. பலம் 2. உறுதியானது**
**ஸாரம் (ந-அ) 3. யுகம்**
**ஸார: (பு-அ)**
**ஸாரா (பெ-ஆ) 4. சிரேஷ்டம்**
**ஸாரம் (ந-அ)**

**दुरोदरो द्यूतकारे पणे द्यूते दुरोदरम् ॥ 1372**

1. दुरोदरः (पुं)

**1. துரோதர: (பு-அ) 1. சூதாடுபவன்**
**துரோதரம் (ந-அ) 2. பந்தயம்**
**3. சூதாட்டம்**

**महारण्ये दुर्गपथे कान्तारं पुंनपुंसकम् ।**

1. कान्तारं (पुं/न)

**1. காந்தார: (பு-அ) 1. பெரியகாடு**
**காந்தாரம் (ந-அ)2. போகமுடியாத/கடக்கமுடியாத வழி**

**मत्सरोऽन्यशुभद्वेषे तद्वत्कृपणयोस्त्रिषु ॥ 1373**

1. मत्सरः (पुं)

***1. மத்ஸர: (பு-அ) 1. பிறர் மேன்மையடைவதைக் கண்டு சகிக்காத தன்மை/பொறாமை***

***மத்ஸர: (பு-அ)2. பிறர் மேன்மையடைவதைக் கண்டு சகிக்காதவன்/பொறாமையுள்ளவன்***

***மத்ஸரீ (பெ-ஈ)***

***மத்ஸரம் (ந-அ)3. கஞ்சன்***

**देवावृते वरः श्रेष्ठे त्रिषु क्लीबं मनाक्प्रिये ।**

1. वरः (पुं/न)

***1. வர: (பு-அ) 1. தேவர்களிடமிருந்து கேட்டுப்பெற்ற வரம்***

***வர: (பு-அ) 2. சிறிது விருப்பமானது***

***வரா (பெ-ஆ)***

***வரம் (ந-அ)***

***சிலர் இதை அவ்யயம் என்றுகூறுகின்றனர்***

**वंशाङ्कुरे करीरोऽस्त्री तरुभेदे घटे च ना ॥ 1374**

1. करीरः (पुं)

***1. கரீர: (பு-அ) 1. மூங்கில் முளை***

***(ந-அ)***

***கரீர: (பு-அ) 2. மரங்களின் வகை***

***3. குடம்***

**ना चमूजघने हस्तसूत्रे प्रतिसरोऽस्त्रियाम् ।**

1. प्रतिसरः (पुं)

***1. ப்ரதிஸர: (பு-அ) 1. சேனையின் பின்பக்கம்***

***ப்ரதிஸர: (பு-அ) 2. திருமணத்தின்போது கட்டும் கங்கனம்***

***ப்ரதிஸரம் (ந-அ)***

**यमानिलेन्द्रचन्द्रार्कविष्णुसिंहांशुवाजिषु ॥ 1375**

**शुकाहिकपिभेकेषु हरिर्ना कपिले त्रिषु ।**

1. हरिः (पुं/न)

***1. ஹரி: (பு-இ) 1. யமன் 2. வாயு 3. இந்திரன் 4. சந்திரன் 5. விஷ்ணு 6. சிங்கம் 7. கிரணம் 8. குதிரை 9. கிளி 10. பாம்பு 11. குரங்கு 12. தவளை***

***ஹரி: (பு-இ) 13. பொன் நிறமுடையபொருளைக் குறிக்கும் போது***

***ஹரீ (பெ-ஈ)***

***ஹரி (ந-அ)***

***கபிலவர்ணம் என்பது லிங்கபட்டீயம்***

**शर्करा कर्परांशेऽपि ....................**

1. शर्करा (स्त्री)

***1. சர்கரா (பெ-ஆ) 1. உயரம்***

***2. உயரமான பூமி - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

***3. சர்க்கரை***

**.......................... यात्रा स्याद्यापने गतौ ॥ 1376**

1. यात्रा (स्त्री)

***1. யாத்ரா (பெ-ஆ) 1. உணவு உண்பது முதலியன (சரீர யாத்ரா, ப்ராணயாத்ரா விஷய யாத்ரா முதலியன)***

***2. செல்லுதல்***

**इरा भूवाक्सुराप्सु स्यात् ................**

1. इरा (स्त्री)

***1. இரா (பெ-ஆ) 1. பூமி 2. வாக்கு 3. கள்***

.......................... तन्द्री निद्राप्रमीलयोः ।

1. तन्द्री (स्त्री)

**1. தந்த்ரீ (பெ-ஈ)** **1. தூக்கம்**

**2. உடல் பற்றி அறியாதிருத்தல்**

**धात्री स्यादुपमतापि क्षितिरप्यामलक्यपि ॥ 1377**

1. धात्री (स्त्री)

**1. தாத்ரீ (பெ-ஈ)** **1. பூமி, நெல்லிமரம்**

**क्षुद्रा व्यङ्गा नटी वेश्या सरघा कण्टकारिका ।**

**त्रिषु क्रूरेऽधनेऽल्पेऽपि क्षुद्रो ..........................**

1. . क्षुद्रा (स्त्री)

**1. க்ஷுத்ரா (பெ-ஆ)** **1. உடல் ஊனமுற்றவன்**

**2. சதிராடும் பெண்**

**3. வேசி**

**4. தேன்கூடு**

**5. வாதநாராயணமரம்**

**க்ஷுத்ர: (பு-அ)** **6. கொடுமையானவள்**

**க்ஷுத்ரா (பெ-ஆ)** **7. கீழ்மகள்**

**க்ஷுத்ரம் (ந-அ)** **8. சிறிதளவு**

**9. கஞ்சன் - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது.**

................................ **मात्रा परिच्छदे ॥ 1378**

**अल्पे च परिमाणे स्यान्मात्रं कात्स्न्र्येऽवधारणे ।**

1. मात्रा (स्त्री/न)

**1. மாத்ரா (பெ-ஆ)** **1. பரிவாரம்**

**2. மிகக்கொஞ்சம். சிறிதளவு**

**3. அளவு**

4. அக்ஷரங்களின் அளவு - குறில், நெடில் எழுத்துக்களின் அளவுகள்

மாத்ரம் (ந-அ) 5. அனைத்துக்கும்/சர்வம்

6. உறுதி-நிச்சயம்

**आलेख्याश्चर्ययोश्चित्रं ........................**

1. चित्रं (न)

*1. சித்ரம் (ந-அ)* 1. ஓவியம்

2. ஆச்சரியம்

**........................ कलत्रं श्रोणिभार्ययोः ॥ 1379**

1. कलत्रं (न)

*1. கலத்ரம் (ந-அ)* 1. இடுப்பின் கீழுள்ள பின் பகுதி (புட்டம்)

2. மனைவி

**योग्यभाजनयोः पात्रं .....................**

1. पात्रं (न)

*1. பாத்ரம் (ந-அ)* 1. தகுதியானவன், யோக்யன்

2. உணவு உண்ணும் பாத்திரம்

3. நதிகளின் இரு கரைகளுக்கு இடயேயுள்ள பகுதி

4. நாடகங்களில்/வேடங்களில் உள்ள பாத்திரம்(an actor)

**............................... पत्रं वाहन पक्षयोः।**

1. पत्रं (न)

*1. பத்ரம் (ந-அ)* 1. வாஹநம்

2. இறகு

3. இலை

निदेश ग्रन्थयोःशास्त्रं ................

1. शास्त्रं (न)

**1. சாஸ்த்ரம் (ந-அ) 1. ஆணை 2. வியாகரணம் முதலிய சாத்திரங்கள்**

.......................... शस्त्र मायुधलोहयोः ॥ 1380

1. शस्त्रं (न)

**1. சஸ்த்ரம் (பு-அ) 1. ஆயுதம் (கத்தி-கதை போன்றவை)**
**2. இரும்பு**

स्याज्जटांशुकयोर्नेत्रं ......................

1. नेत्रं (न)

**1. நேத்ரம் (ந-அ)**
**1. செடிகளின் வேர்**
**2. வெண்பட்டுச்சேலை**
**3. கயறு**
**4. கண்**
**5. துணி என்று சிலர்**

.......................... क्षेत्रं पत्नीशरीरयोः।

1. . क्षेत्रं (न)

**1. க்ஷேத்ரம் (ந-அ) 1. உடல்**
**2. மனைவி**
**3. நஞ்சைநிலம்**
**4. தயார்படுத்திய நிலம்**

मुखाग्रे क्रोडहलयोः पोत्रं ...................

1. पोत्रं (न)

**1. போத்ரம் (ந-அ) 1. பன்றியின் முகம் (நிலத்தை உழுவதால், தோண்டுவதால்)**
**2. ஏர்காலின் நுனி**

**....................गोत्रं च नाम्नि च ॥ 1381**

1. गोत्रं (न)

*1. கோத்ரம் (ந-அ) 1. பெயர்*
*2. குலம்-கோத்ரம் -'ச'காரத்தால்*
*3. பலம் (பெறப்பட்டது*

*கோத்ர: (பு-அ) 4. பர்வதம்*
*கோத்ரா (பெ-ஆ) 5. பூமி*
*6. பசுக்களின் கூட்டம்*

**सत्रमाच्छादने यज्ञे सदादाने वनेऽपि च ।**

1. सत्रं (न)

*1. ஸத்ரம் (ந-அ) 1. உடலை போர்த்தும் வஸ்திரம்*
*2. யாக விசேஷம் (சத்ரயாகம்)*
*3. இடைவிடாமல் கொடுத்தல்*
*4. காடு*
*5. டம்பம் (இது அபி என்ற தால்)*

**अजिरं विषये कायेऽपि ..................**

1. अजिरं (न)

*1. அஜிரம் (ந-அ) 1. விஷயம்-சப்தாதி விஷயங்கள்*
*2. உடல்*
*3. முற்றம்/மூன்றில்- இது அபி என்றதால் பெறப்பட்டது*

**................ अम्बरं व्योम्नि वाससि ॥ 1382**

1. अम्बरं (न)

*1. அம்பரம் (ந-அ) 1. ஆகாயம்*
*2. வஸ்திரம்/ஆடை*

**चक्रं राष्ट्रेऽपि ....................**

1. चक्रं (न)

***1. சக்ரம் (ந-அ)*** ***1. நாடு***

***2. நான்குவித படைகள் - இது குறிப்பாக அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

***3. வண்டியின் சக்கரம்***

***4. கிராமத்தினர் - கிராமத்தின் அனைத்துவித சமூகம்***

***5. குயவனின் சக்கரம்***

***6. ஆயுதம் - சக்ராயுதம்***

***சக்ர: (பு-அ)*** ***7. சக்ரவாஹ பக்ஷி***

***8. அனைத்து ஸமூகத்திற்கும்***

**............... अक्षरं तु मोक्षेऽपि ...........**

1. अक्षरं (न)

***1. அக்ஷரம் (ந-அ)*** ***1. மோக்ஷம்***

***2. அகராதி எழுத்துக்கள் - இது அபி என்றதால்***

***3. பரபிர்மம்***

**................................. क्षीरमप्सु च ।**

1. क्षीरं (न)

***1. க்ஷீரம் (ந-அ)*** ***1. பால்*** ***2. தண்ணீர்***

**स्वर्णेऽपि भूरिचन्द्रौ द्वौ .....................**

1. . भूरि (पुं/स्त्री/न) 2. चन्द्रं (न/पुं)

***1. பூரி (ந-இ)*** ***1. தங்கம்***

***பூரி(பு/பெ/ந-இ)*** ***2. அதிகம்***

*2. சந்த்ரம் (ந-அ) 1. தங்கம் - புல்லிங்கம் என்று சிலர்*
*சந்த்ர: (பு-அ) 2. சந்திரன் - இது அபி என்றதால் பெறப்பட்டது*
*3. கர்ப்பூரம்*
*4. காபிலம் என்ற நூல்*

**.................... द्वारमात्रे तु गोपुरम् ॥** 1383

1. . गोपुरम् (न)

*1. கோபுரம் (ந-அ) 1. வாசற்படி*
*2. பட்டணத்தின் வாயில்படி - இது அபி என்றசொல்லால் பெறப்பட்டது*
*3. கோரைக் கிழங்கு*

**गुहादम्भौ गह्वरे द्वे ..........................**

1. गह्वरं (न)

*1. கஹ்வரம் (ந-அ) 1. குஹை*
*2. கபடம்*

**................................ रहोऽन्तिकमुपह्वरे ।**

1. उपह्वरं (न)

*1. உபஹ்வரம் (ந-அ) 1. தனிமை (ஏகாந்தம்)*
*2. அருகில்*

**पुरोऽधिकमुपर्यग्राणि ..........................**

1. अग्रं (पुं/स्त्री/न)

*1. அக்ர: (பு-அ) 1. முன் (நுனி)*
*அக்ரா (பெ-ஆ)*
*அக்ரம் (ந-அ)*
*2. அதிகம்/மேலும்*
*3. உயரம்*

अक्रः(பு/பெ/ந) 4. முக்கியமானவன்
அக்ரம் (ந-அ) 5. பிகைஷ-சிறப்பு வேறுபாடு

........................ अण्यगारे नगरे पुरम् ॥ 1384

मन्दिरं च ........................

1. . पुरम् , 2. मन्दिरं (न)

1. புரம்(ந-அ) 2. மந்திரம்(ந-அ)(இவ்விரண்டும்)1. வீடு
2. பட்டணம்

................. अथ राष्ट्रोऽस्त्री विषये स्यादुपद्रवे ।

1. राष्ट्रं (पुं/न)

1. ராஷ்ட்ரம் (பு-அ) 1. நாடு 2. உபத்ரவம் (இடையூறு)
ராஷ்ட்ரம் (ந-அ)

दरोऽस्त्रियां भये श्वभ्रे ...................

1. दरः (पुं/न)

1. தரः (பு-அ) 1. பயம் 2. பள்ளம்
தரம் (ந-அ)

....................वज्रोऽस्त्री हीरके पवौ ॥ 1385

1. वज्रः (पुं/न)

1. வஜ்ரः (பு-அ) 1. வைரம் 2. வஜ்ராயுதம்
வஜ்ரம் (ந-அ)

तन्त्रं प्रधाने सिद्धान्ते सूत्रवाये परिच्छदे ।

1. तन्त्रः (पुं/न)

1. தந்த்ரः (பு-அ) 1. முக்கியமானவன் 2. சித்தாந்தநூல்
தந்த்ரம் (ந-அ) 3. நூல் சலாகை/படுகை 4. பரிவாரம்

**औशीरं चामरे दण्डेप्यौशीरं शयनासने ॥ 1386**

1. औशीरः (पुं/न)

***1. ஔசீர: (பு-அ) 1. சாமரம் 2. கம்பு 3. சாமரதண்டம்***
***ஔசீரம்(ந-அ) 4. படுக்கை 5. ஆஸனப்பலகை***

***சயனம் என்பதை தூக்கம் என்று சிலர். 'அபி' என்றதால் வெட்டிவேர் சம்பந்தமான பொருட்கள் கொள்ளப்படுகிறது***

**पुष्करं करिहस्ताग्रे वाद्यभाण्डमुखे जले ।**
**व्योम्नि खड्गफले पद्मे तीर्थौषधि विशेषयोः ॥ 1387**

1. पुष्करं (न)

***1. புஷ்கரம் (ந-அ) 1. யானையின் துதிக்கை நுனி***
***2. மத்தளம் போன்ற வாத்தியங்களின் முகம்***
***3. தண்ணீர் 4. ஆகாசம் 5. கத்தி***
***6. தாமரை 7. தீர்த்தவிசேஷம்***
***8. மருந்து விசேஷம்***

**अन्तरमवकाशावधिपरिधानान्तर्धिभेदतदर्थ्ये ।**
**छिद्रात्मीयविनाबहिरवसरमध्येऽन्तरात्मनि च ॥ 1388**

1. अन्तरं (न)

***1. அந்தரம் (பு-அ)1. இடைவெளி 2. மரியாதை***
***3. உடுத்துகிற புடவை 4. வ்யவதானம்***
***5. சிறப்பானது 6. 'இதுதான்' என்ற பொருள்***
***7. ஓட்டை/துளை 8. தன் சம்பந்தமானது***
***9. அது தவிற என்ற பொருளில் 10.வெளி***
***11. சந்தர்பம் 12. மையப்பகுதி 13.பரமாத்மா***
***14. வேறானது. இது 'ச' என்ற சொல்லால் பெறப்பட்டது***

**मुस्तेऽपि पिठरं ......................**

1. पिठरं (न)

***1. பிடரம் (ந-அ)*** **1. கோரைக்கிழங்கு**
**2. பானை-இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது**
**3. மத்தின் காம்பு**

**.................... राजकशेरुण्यपि नागरम् ।**

1. नागरं (पुं/न)

***1. நாகர: (பு-அ)*** **1. பத்ரமுஸ்தை என்ற மருந்துச்செடி**
***நாகரம் (ந-அ)*** **2. தாமரைக்கிழங்கு**
**3. சுக்கு**
**4. பட்டணம்**

**शार्वरं त्वन्धतमसे घातुके भेद्यलिङ्गकम् ॥ 1389**

1. शार्वरं (न)

***1. சார்வரம் (ந-அ)*** **1. கனவிருள்**
***சார்வர: (பு-அ)*** **2. கொல்லும் ஸ்வபாவமுள்ளவன்**
***சார்வரா (பெ-ஆ)***
***சார்வரம் (ந-அ)***

**गौरोऽरुणे सिते पीते ................**

1. गौरः (पुं/स्त्री/न)

***1. கௌர: (பு-அ)*** **1. சிவந்த பொருள்**
***கௌரா (பெ-ஆ)***
***கௌரம் (ந-அ)*** **2. வெள்ளை வஸ்து**
**3. பச்சை வஸ்து**

**...................... व्रणकार्यप्यरुष्करः ।**

1. अरुष्करः (पुं/स्त्री/न)

*1. அருஷ்கர: (பு-அ)* 1. ரணம் செய்தல்
*அருஷ்கரா(பெ-ஆ)*
*அருஷ்கரம் (ந-அ)*
*அருஷ்கர: (பு-அ)* 2. சோமரஸம்-அபி என்ற சொல்லால்,
சேங்கொட்டை மரம் என்று சிலர்

**जठरः कठिनेऽपि स्यात् ...............**

1. जठरः (पुं/स्त्री/न)

*1. ஜடர: (பு-அ)* 1. கடினமான வஸ்து
*ஜடரா (பெ-ஆ)*
*ஜடரம் (ந-அ)*
*ஜடரம் (ந-அ)* 2. வயிறு-இது - அபி என்றதால்

**..................... अधस्तादपि चाधरः ॥ 1390**

1. अधरः (पुं/स्त्री/न)

*1. அதர: (பு-அ)* 1. கீழே இருக்கும் பொருள்
*அதரா (பெ-ஆ)*
*அதரம் (ந-அ)*
2. ஹீனமானவன்-இது 'அபி' என்றதால்
*அதர: (பு-அ)* 3. உதடு

**अनाकुलेऽपि चैकाग्रे ...............**

1. एकाग्रः (पुं/स्त्री/न)

*1. ஏகாக்ர: (பு-அ)* 1. மனத்துயரில்லாதவன்
*ஏகாக்ரா (பெ-ஆ)*
*ஏகாக்ரம் (ந-அ)* 2. ஸாவ்தானமானவன்-இது அபி
என்ற சொல்லால் பெறப்பட்டது

**........................ व्यग्रो व्यासक्त आकुले ।**

1. व्यग्रः (पुं/स्त्री/न)

**1. வ்யக்ர: (பு-அ) 1. ஓரிடத்தில் மனத்தை ஈடுபடுத்தியவன்**
**வ்யக்ரா (பெ-ஆ)**
**வ்யக்ரம் (ந-அ) 2. கவலைப்படுகிறவன்**

**उपर्युदीच्यश्रेष्ठेष्वप्युत्तरः स्यात् ...........**

1. उत्तरः (पुं/स्त्री/न)

**1. உத்தர: (பு-அ) 1. மேலும்**
**உத்தரா(பெ-ஆ)**
**உத்தரம் (ந-அ) 2. வடதேசம் முதலியன**
**3. தலைசிறந்தவர்கள்**
**4. பதில்**

**.................................. अनुत्तरः ॥ 1391**

**एषां विपर्ययेश्रेष्ठे .......................**

1. अनुत्तरः (पुं/स्त्री/न)

**1. அநுத்தர: (பு-அ) 1. இணையாக இல்லாதது (குறைந்தது) (இரண்டாம்நிலை)**
**அநுத்தரா(பெ-ஆ)**
**அநுத்தரம்(ந-அ) 2. வடநாடு இல்லாதது**
**3. சிரேஷ்டமாகாதது**
**4. சிரேஷ்டன்**
**5. பதிலில்லாதது**

**.................... दूरानात्मोत्तमाः पराः।**

1. परः (पुं/स्त्री/न)

**1. பர: (பு-அ) 1. தூரமானது**
**2. அந்நியமானது/அது இல்லாதது**
**3. சிரேஷ்டமானது**

**स्वादुप्रियौ च मधुरौ ............**

1. . मधुरः (पुं/स्त्री/न)

***1. மதுர: (பு-அ)  1. இனிப்பானது***
***மதுரா (பெ-ஆ)  2. இஷ்டமானது***
***மதுரம் (ந-அ)***

**........................ क्रूरौ कठिननिर्दयौ ॥ 1392**

1. क्रूरः (पुं/स्त्री/न)

***1. க்ரூர: (பு-அ)  1. கடினமானது***
***க்ரூரா (பெ-ஆ)  2. இறக்கமற்றவன்***
***க்ரூரம் (ந-அ)***

**उदारो दातृमहतो ...................**

1. उदारः (पुं/स्त्री/न)

***1. உதார: (பு-அ)  1. தானம் செய்பவன்***
***உதாரா (பெ-ஆ) 2. பெரியவன்***
***உதாரம் (ந-அ)***

**.................... इतरस्त्वन्यनीचयोः ।**

1. इतरः (पुं/स्त्री/न)

***1. இதர: (பு-அ)  1. அன்னியமானவன்***
***இதரா (பெ-ஆ)  2. நீசன்***
***இதரம் (ந-அ)***

**मन्दस्वच्छन्दयोः स्वैरं.....................**

1. . स्वैरं (पुं/स्त्री/न)

***1. ஸ்வைரம் (பு-அ)  1. மந்தன்***
***ஸ்வைரா (பெ-ஆ) 2.சுதந்திரம்***
***ஸ்வைரம் (ந-அ)***

**...................... शुभ्रमुद्दीप्तशुक्लयोः ॥ 1393**

1. शुभ्रः (पुं/स्त्री/न)

***1. சுப்ர: (பு-அ)*** ***1. மிகுந்த ப்ரகாசமுடையது***
***சுப்ரா (பெ-ஆ)***
***சுப்ரம் (ந-அ)*** ***2. வெண்மையானது***

"ர" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை

--------------

## अथ लान्तवर्गः

***ல வில் முடியும் சொற்கள்***

**चूडा किरीटं केशाश्च संयता मौलयस्त्रयः ।**

1. मौलिः (पुं/स्त्री)

***1. மௌலி: (பு-இ) 1. சிகை 2. கிரீடம்***
***3. முடிந்துள்ள தலைமுடி***
***மௌலீ (பெ-ஈ)***

**द्रुमप्रभेदमातङ्ग काण्डपुष्पाणि पीलवः ॥** 1394

1. पीलुः (पुं)

***1. பீலு: (பு-அ)*** ***1. காஞ்சனைச்செடி, காசருக்கை என்பது லிங்கபட்டீயம்***
***2. யானை 3. பாணம் 4. புஷ்பம்***

**कृतान्तानेहसोः कालः ................**

1. . कालः (पुं)

***1. கால: (பு-அ)*** ***1. யமன் 2. காலம்***

**.......................... चतुर्थेऽपि युगे कलिः ।**

1. कलिः (पुं)

***1. கலி: (பு-இ)  1. நான்காம் யுகமான கலி***
***2. கலஹம்***

**स्यात् कुरङ्गेऽपि कमलः ................**

१. कमलः (पुं/स्त्री/न)

***1. கமல: (பு-அ)  1. மான்***
***கமலா (பெ-ஆ) 2. தாமரை, நீர்***
***கமலம் (ந-அ)  3. மஹாலக்ஷ்மீ***

**......................... प्रावारेऽपि च कम्बलः ॥ 1395**

1. कम्बलः (पुं)

***1. கம்பல: (பு-அ)  1. உத்தரீயம்/மேல் துண்டு***
***2. கம்பளி-இது அபி சப்தத்தால்***
***3. பசுவின் கழுத்துத்தோல்/அலதாரி***
***4. அனைத்து விசேஷங்களுக்கும்***

**करोपहारयोः पुंसि बलिः प्राण्यङ्गजे स्त्रियाम् ।**

1. बलिः (पुं)

***1. பலி: (பு-இ)  1. கப்பம்  2. பூசை செய்ய உள்ள மணி, தட்டு முதலியவை***
***பலி: (பெ-இ)  2. உயிரினங்களின் அங்கங்களில் தோன்றும் உயிர்கள்***
***3. மஹாபலி சக்ரவர்த்தி***

**स्थौल्यसामर्थ्यसैन्येषु बलं ना काकसीरिणोः ॥1396**

1. बलं (पुं/न)

***1. பலம் (ந-அ)  1. வலிமை  2. ஸாமர்த்தியம்***
***3. சேனை/படை***
***பல: (பு-அ)  4. காக்கை  5. பலராமன்***

**वातूलः पुंसि वात्यायामपि वातासहे त्रिषु ।**

1. वातूलः (पुं/स्त्री/न)

***1. வாதூல: (பு-அ)*** 1. வாயுக்கள்/வாயு ஸமூஹம்
***வாதூல: (பு/பெ/ந)*** 2. காற்றை சகித்துக்கொள்பவன்
காற்றை சகிக்காதவன் என்று சிலர்
3. வாதூலாகமம்,
4. உன்மத்தம்- இது அபி என்ற
சொல்லால் பெறப்பட்டது

**भेद्यलिङ्गः शठे व्यालः पुंसि श्वापदसर्पयोः ॥ 1397**

1. व्यालः (पुं/स्त्री/न)

***1. வ்யால: (பு-அ)*** 1. துர்ஜனன் 2. புலி 3. பாம்பு
***வ்யாலா (பெ-ஆ)***
***வ்யாலம் (ந-அ)***

**मलोऽस्त्री पापविट्किट्टान्यः ............**

1.. मलः (पुं/न)

***1. மல: (பு-அ)*** 1. பாபம் 2. விட்டை
***மலம் (ந-அ)***
3. வியர்வை - சுக்லம் போன்ற
உடலில் தோன்றும் அழுக்கு
4. சிட்டக்கல்

**...................... अस्त्री शूलं रुगायुधम् ।**

1. शूलं (पुं/न)

***1. சூல: (பு-அ)*** 1. சூலை/வயிற்றுவலி
***சூலம் (ந-அ)*** 2. சூலாயுதம்

**शङ्कावपि द्वयोः कीलः .............**

1. कीलः (पुं/स्त्री)

***1. கீல: (பு-அ)  1. ஆணி  2. அக்னி ஜ்வாலை இது அபி என்றதால் பெறப்பட்டது***

***கீலா (பெ-ஆ) 1. முழங்கை***

........................ **पालिः स्त्र्यश्रयङ्कपङ्क्तिषु ॥** 1398

1.पालिः (स्त्री)

***1. பாலி: (பெ-இ) 1. கரைகள் 2. அடையாளம் 3. பிரதேசம் 4. மீசையுள்ள பெண் 5. காதோலை***

**कलाशिल्पे कालभेदेऽपि** ...................

1. कला (पुं/स्त्री/न)

***1. கலா (பு-ஆ)  1. சிற்பம் சித்திரம் அறிதல்***
***2. 540 நிமிஷமுடைய காலம்***
***3. சந்திரனின் பதினான்காம் பாகம்***
***4. வட்டி***

***கலா (பெ-ஆ)  1. கணக்கு வைத்தல்***
***கலா (பு/பெ/ந) 1. ஜீரணமானது***

................................**आलीख्यावली अपि ।**

1. आलिः (स्त्री)

***1. ஆலி: (பெ-இ)  1. தோழி  2. பங்தி/வரிசை***
***2. கட்டி - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

**अब्ध्यम्बुविकृतौ वेला कलामर्यादयोरपि ॥** 1399

1. वेला (स्त्री)

***1. வேலா (பெ-ஆ)*** 1. சமுத்திரம் பொங்குதல்
2. ஒரு காரியம் செய்ய வேண்டிய தக்கதருணம்
3. மரியாதை
4. கடற்கரை-அபி என்ற சொல்லால் பெறப்பட்டது.
5. அரசனின் விருந்து
6. அநாயசமரணம்/எதிர்பாராத இயற்கை மரணம்

**बहुलाः कृत्तिका गावो बहुलोऽग्नौ शितौ त्रिषु ।**

1. बहुलाः (स्त्री)

***1. பஹுலா: (பெ-ஆ)*** 1. கார்த்திகை நக்ஷத்திரம்
*(பெ-ஆ)* 2. பன்மை
*(பெ-ஆ)* 3. பசுக்கள்
,, 4. ஏலக்காய்
***பஹுலா:(பு/பெ/ந)*** 5. கறும்பு - வெல்லம் முதலியன
***பஹுல: (பு-அ)*** 6. அக்னி
7. கிருஷ்ணபக்ஷம்/தேய்பிறை

**लीला विलासक्रिययोः .......................**

1. लीला (स्त्री)

***1. லீலா (பெ-ஆ)*** 1. பெண்களிடம் கலவித்தொழில்கள்
2. செயல்

**........................ उपला शर्करा अपि ॥** 1400

1. उपला (स्त्री)

***1. உபலா (பெ-ஆ)*** 1. பருக்கைக் கல் - நிலம்
***உபல: (பு-அ)*** 2. ரத்னம் - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது

**शोणितेऽम्भसि कीलालं ..............**

1. कीलालं (न)

***1. கீலாலம் (ந-அ) 1. ரக்தம் 2. ஜலம்***

**............................मूलमाद्ये शिफाभयोः ।**

1. मूलं (न)

***1. மூலம் (ந-அ) 1. முதல்/தொடக்கம்***
***2. விழுது***
***3. மூல நக்ஷத்திரம்***

**जालं समूह आनायो गवाक्षक्षारकावपि ॥ 1401**

1. जालं (न/स्त्री)

***1. ஜாலம் (ந-அ) 1. சமூஹம் 2. வலை 3. ஜன்னல்***
***4. பூவின்மொட்டு 5. டம்பம்***
***ஜாலீ (பெ-ஈ) 1. புடலஞ்செடி***

**शीलं स्वभावे सद्वृत्ते ..................**

1. शीलं (न)

***1. சீலம் (ந-அ) 1. ஸ்வபாவம்/இயல்பு 2. நல்ல நடத்தை***

**......................... सस्ये हेतुकृते फलम् ।**

1. फलम् (न)

***1. பலம் (ந-அ) 1. அறுவடை போன்றவை 2. பயன்***
***3. அம்பின் நுனி***

**छदिर्नेत्ररुजो: क्लीबं समूहे पटलं न ना ॥ 1402**

1. पटलं (पुं/न)

***1. படலம் (ந-அ) 1. வீட்டுக்கூரை 2. கண்ணோய்***
***படல: (ந-அ) 1. சமூஹம்***
***(பு-அ)***

**अधः स्वरूपयोरस्त्री तलं ................**

1. तलं (पुं/न)

***1. தலம் (பு-அ/ந-அ) 1. கீழ் 2. ஸ்வரூபம் 3. வில்நுனி 4. உள்ளங்கை***

**............................ स्याच्चामिषे पलम् ।**

1.पलम् (न)

***1. பலம் (ந-அ)1. மாமிசம்***
***2. எடை(320 குந்துமணி எடைகொண்டது)***

**और्वानलेऽपि पातालं ...........................**

1.. पातालं (न)

***1. பாதாலம் (ந-அ) 1. வடவாக்னி (கடலில் உள்ள அக்னி)***
***2. நாகலோகம் - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

**........................ चेलं वस्त्रेऽधमे त्रिषु ॥ 1403**

1. चेलं (न)

***1. சேலம் (ந-அ) 1. ஆடை***
***சேலம் (பு/பெ/ந-ஆ) 2. அதமமானது/கீழானது***

**कुकूलं शङ्कुभिः कीर्णे श्वभ्रे ना तु तुषानले ।**

1. कुकूलं (न/पुं/)

***1. குகூலம் (ந-அ)1. எதிரிப் படைகள் கோட்டையை அணுகமுடியாதபடி கோட்டை அருகில் முளைகள் நாட்டிய பள்ளம் (இது அகழி அல்ல)***
***குகூல: (பு-அ) 2. உமியில் உண்டாக்கிய தணல்***

**निर्णीते केवलमिति त्रिलिङ्गं त्वेककृत्स्नयोः ॥1404**

1. केवलं (न)

***1. கேவலம் (ந-அ)   1. நிர்ணயிக்கப்பட்டது மட்டும்***
***கேவல: (பு/பெ/ந) 1. ஒன்றுக்கு மேற்பட்டவை***

**पर्याप्तिक्षेमपुण्येषु कुशलं शिक्षिते त्रिषु ।**

1.. कुशलं (न)

***1. குசலம் (ந-அ) 1. சாமர்த்தியம்  2. சுபம்  3. புண்யம்***
***குசல: (பு-அ) 1. சிக்ஷிக்கப்பட்டது***

**प्रवालमङ्कुरेप्यस्त्री ...........................**

1. प्रवालः (पुं/न)

***1. ப்ரவால: (பு-அ) 1. முளைத்துவரும் அங்குரம்/துளிர்***
***2. பவளம்  3. வீணையின் தண்டம்***

**..................... त्रिषु स्थूलं जडेऽपि च ॥** 1405

1. स्थूलं (पुं/स्त्री/न)

***1. ஸ்தூல: (பு-அ)  1. மந்தபுத்திகாரன்***
***ஸ்தூலா (பெ-ஆ)***
***ஸ்தூலம் (ந-அ)   2. உடல்பெருத்தவன்***

**करालो दन्दुरे तुङ्गे ..................**

1.. करालः (पुं/स्त्री/न)

***1. கரால: (பு-அ)   1. மேடுபள்ளம்***
***கராலா (பெ-ஆ) 2. மேட்டுப்பல்லுடையவன்-***
***என்று சிலர்***
***கராலம் (ந-அ)  3. உயரமானது***

**....................... चारौ दक्षे च पेशलः ।**

1. पेशलः (पुं/स्त्री/न)

*1. பேசல: (பு-அ)   1. மனக்கவர்ச்சியளிப்பது*
*பேசலா (பெ-ஆ)*
*பேசலம் (ந-அ)   2. தெரிந்தவன்*
*3. கோவில்   - அபி என்ற சொல்லால்*
*4. உலக்கை   பெறப்பட்டது*

**मूर्खेऽर्भकेऽपि बालः स्यात् ..................**

1. बालः (पुं/स्त्री/न)

*1. பால: (பு-அ)   1. முட்டாள்   2. சிறுவன்*
*பாலா (பெ-ஆ)*
*பாலம் (ந-அ)*

*பால: (பு-அ)   3. வால்   4. கேசம்*
*பாலம் (ந-அ)   5. சிறியவேர்*

**..............................लोलश्चलसतृष्णयोः ॥1406**

1. लोलः (पुं/स्त्री/न)

*1. லோல: (பு-அ)   1. அசைதல்*
*லோலா (பெ-ஆ) 2. ஆசையுடையவன்*
*லோலம் (ந-அ)*

"ல" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை

-------•-------

## अथ वान्तवर्गः

**வ வில் முடியும் சொற்கள்**

**दवदावौ वनारण्यवह्नी.............**

1.. दवः (पुं) २. दावः (पुं)

*1. தவ: (பு-அ)   1. காடு, காட்டுத்தீ*
*தாவ: (பு-அ)   2. ,,   ,,*

**...................जन्महरौ भवौ ।**

1. भवः (पुं)

***1. பவ: (பு-அ)*** ***1. பிறத்தல் 2. சிவன்***
***3. சம்ஸாரமாகிய பிரபஞ்சம்***

**मन्त्री सहायः सचिवौ .............**

1. सचिवः (पुं)

***1. ஸசிவ: (பு-அ)*** ***1. மந்திரி 2. உதவியாளர்***

**...........................पतिशाखिनरा धवाः ॥1407**

1. धवः (पुं)

***1. தவ: (பு-அ)*** ***1. கணவன் 2. ஆளுகின்ற அரசன்***
***3. மரம் 4. மனிதன்***

**अवयः शैलमेषार्का ................**

1. अविः (पुं)

***1. அவி: (பு-இ)*** ***1. மலை 2. ஆடு 3. சூரியன்***

**...................आह्वानाध्वरा हवाः ।**

1. हवः (पुं)

***1. ஹவ: (பு-அ)*** ***1. ஆணை 2. அழைத்தல் 3. யாகம்***

**भावः सत्तास्वभावाभिप्रायचेष्टात्मजन्मसु ।1408**

1. भावः (पुं)

***1. பாவ: (பு-அ)*** ***1. பொருட்களை உருவாக்குதல்***
***(விளைவித்தல் மற்றும் பிற)***
***2. இயல்பு 3. கருத்து/அபிப்பிராயம்***
***4. செயல் 5. ஆத்மா 6. பிறப்பு***
***7. உயிர்கள் என்று சிலர்***

**स्यादुत्पादे फले पुष्पे प्रसवो गर्भमोचने ।**

1.. प्रसवः (पुं)

***1. ப்ரஸவ: (பு-அ)*** ***1. பிறத்தல்   2. பயன்   3. மலர்***
***4. பிரஸவம்***

**अविश्वासेऽपह्नवेऽपि निकृतावपि निह्नवः ॥ 1409**

1. निह्निवः (पुं)

***1. நிஹ்நவ: (பு-அ)*** ***1. நம்பிக்கையற்றது   2. மறைத்தல்***
***3. திரஸ்காரம் செய்தல்/விலக்குதல்***
***4. கபடம்-இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது***

**उत्सेकामर्षयोरिच्छाप्रसवे मह उत्सवः ।**

1.उत्सवः (पुं)

***1. உத்ஸவ: (பு-அ)*** ***1. உப்புதல்   2. கோபம்***
***3. ஆசை தோன்றுதல்   4. பண்டிகை***

**अनुभावः प्रभावे च सतां च मतिनिश्चये ॥ 1410**

1.. अनुभावः (पुं)

***1. அநுபாவ: (பு-அ)1. சிறப்பு***
***2.பெரியவர்களின் உறுதியான எண்ணம்***
***3. சாத்விகச் செயல்கள் - இது 'ச' என்ற சொல்லால் பெறப்பட்டது***

**स्याज्जन्महेतुः प्रभवः स्थानं चाद्योपलब्धये ।**

1. प्रभवः (पुं)

***1. ப்ரபவ: (பு-அ)1. பிறப்புக்குக் காரணம் 2.காரணமானது***
***3. முதலில் அறிதல்   4. ஸ்தானமானது***
***5. ப்ரபவ என்ற ஆண்டு அல்லது ப்ரபவ முதலிய 60 ஆண்டுகள்.***

**शूद्रायां विप्रतनये शस्त्रे पारशवो मतः ॥ 1411**

1. पारशवः (पुं)

***1. பாரசவ: (பு-அ) 1. சூத்ர பெண்ணிடம் பிராமணனுக்குப் பிறந்தவன்***

***2. ஆயுதம்***

**ध्रुवो भभेदे क्लीबे तु निश्चिते शाश्वते त्रिषु ।**

1.. ध्रुवः (पुं/स्त्री/न)

***1. த்ருவ: (பு-அ) 1. த்ருவ நட்சத்திரம்***
***த்ருவம் (ந-அ) 2. உறுதி, நிச்சயம்***
***த்ருவ: (பு-அ) 3. நித்தியமானது***
***த்ருவா (பெ-ஆ) ,,***

**स्वो ज्ञातावात्मनि स्वं त्रिष्वात्मीये स्वोऽस्त्रियां धने ॥ 1412**

1.. स्वः (पुं/स्त्री/न)

***1. ஸ்வ: (பு-அ) 1. க்ஞாதி - தாயாதி - பங்காளி***
***ஸ்வ: (ந-அ) தான் (என்று தன்னைக் குறித்தல்)***
***ஸ்வ: (பு-அ) தன்னுடையது***
***ஸ்வா (பெ-ஆ) ,,***
***ஸ்வம் (ந-அ) ,,***
***ஸ்வ: (பு-அ) 2. செல்வம்***
***ஸ்வம் (ந-அ)***

**स्त्रीकटीवस्त्रबन्धेऽपि नीवी परिपणेऽपि च ।**

1.नीवी (स्त्री)

***1. நீவீ (பெ-ஈ) 1.பெண்கள் இடுப்பில் கட்டும் புடவையின் முடிச்சு***
***2. முதலாவதாக உள்ள பணம்/மூலதனம்***
***3. பந்தயத்தில் கட்டிய பொருள்***

**शिवा गौरीफेरवयोः ..................**

1. शिवा (पुं/स्त्री/न)

***1. சிவா (பெ-ஆ) 1. கௌரீதேவீ 2. நரி***
***3. கடுக்காய்ச்செடி 4. நெல்லிச்செடி***

***சிவ: (பு-அ) 1. சிவபெருமான்***

***சிவம் (ந-அ) 1. சுபம்***

**..................... द्वन्द्वं कलहयुग्मयोः ॥ 1413**

1. द्वन्द्वं (न)

***1. த்வந்தம் (ந-அ) 1. போர் 2. இரண்டு எண்ணிக்கை***
***3. பெண்குறி***

**द्रव्यासुव्यवसायेषु सत्त्वमस्त्री तु जन्तुषु ।**

1. सत्त्वं (न/पुं)

***1. ஸத்வம் (ந-அ) 1. பொருட்கள் 2. உயிர் 3. உத்யோகம்***
***ஸத்வ: (பு-அ) 4. உயிரினங்கள்***
***ஸத்வம் (ந-அ)***

**क्लीबं नपुंसके षण्ढे वाच्यलिङ्गमविक्रमे ॥ 1414**

1. क्लीबं (न)

***1. க்லீபம் (ந-அ) 1. ஆண்மையற்றவன், அலி***

***க்லீப: (பு-அ) 2. மீசையில்லாதவன்***

***க்லீபா (பெ-ஆ)***

***க்லீபம் (ந-அ) 3. பராக்ரமமில்லாதவன்***

**"வ" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை**

**-------S-------**

## अथ शान्तवर्गः

**ச வில் முடியும் சொற்கள்**

**द्वौ विशौ वैश्यमनुजौ ............**

1.विट् (श् -पुं)

*1. விட் (பு-ச்)* *1. வைச்யன்* *2. மனிதன்*

**......................... द्वौ चराभिमरौ स्पशौ ।**

1.. स्पशः (पुं)

*1. ஸ்பச: (பு-அ)* *1. ஒற்றன்* *2. யுத்தம்*
*3. புலி, சிங்கம் போன்றவற்றுடன் சண்டை போடுபவன்*

**द्वौ राशी पुञ्जमेषाद्यौ ................**

1. राशिः (पुं)

*1. ராசி: (பு-இ)* *1. ஸமூஹம்*
*2. மேஷம் முதலிய 12 ராசிகள்*

**........................ द्वौ वंशौ कुलमस्करौ ॥** 1415

1. वंशः (पुं)

*1. வம்ச: (பு-அ)* *1. குலம்* *2. மூங்கில்*

**रहः प्रकाशौ वीकाशौ ................**

1.. वीकाशः (पुं)

*1. வீகாச: (பு-அ)* *1. தனிமையான இடம்*
*2. தெளிவான பொருள்*

**......................... निर्वेशो भृतिभोगयोः ।**

1. निर्वेशः (पुं)

*அமர. 6-14*

*1. நிர்வேச: (பு-அ) 1. கூலி 2. போகம்*

**कृतान्ते पुंसि कीनाशः क्षुद्रकर्षकयोस्त्रिषु ॥ 1416**

1. कृतान्तः (पुं)

*1. க்ருதாந்த: (பு-அ) 1. யமன்*
*க்ருதாந்த: (பு-அ) 2. தரித்ரன்*
*க்ருதாந்தா(பெ-ஆ) 3. உழுகின்றவன்*
*க்ருதாந்தம் (ந-அ)*

**पदे लक्ष्ये निमित्तेऽपदेशः ..................**

1. अपदेशः (पुं)

*1. அபதேச: (பு-அ) 1. ஸ்தானம் 2. காரணம் 3. நிமித்தம் 4. புகழ்/பிரசித்தி*

**.........................स्यात् कुशमप्सु च ।**

1. कुशम् (न)

*1. குசம் (ந-அ) 1. தண்ணீர்*
*குச: (பு-அ) தர்ப்பை*
*குசம் (ந-அ) ,,*

**दशावस्थानेकविधाऽपि ................**

1. दशा (स्त्री)

*1. தசா (பெ-ஆ) 1. குழந்தை,பால, வாலிப, முதுமை போன்ற பருவங்கள்*
*2. ஆடையின் நுனி அல்லது புடவையின் நுனி - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது*

**......................आशा तृष्णापि चायता ॥ 1417**

1. आशा (स्त्री)

**1. ஆசா (பெ-ஆ)** 1. அதிகமான விருப்பம்/பேராசை
2. திசை - இது அபி என்ற சொல்லால் பெறப்பட்டது

**वशा स्त्री करिणी च स्याद् ................**

1. वशा (स्त्री)

**1. வசா (பெ-ஆ)** 1. பெண் 2. பெண்யானை
3. மலட்டுப்பசு

வச: (பு-அ)
வசா (பெ-ஆ) 4. அதிகமானவை
வச (ந-அ) ,,

**.................... दृग् ज्ञाने ज्ञातरि त्रिषु ।**

1. दृक् (पुं/स्त्री/न)

**1. த்ருக் (பெ-ச்)** 1. ஞானம்/அறிவு
த்ருக் (பு/பெ-ந) 2. அறிவாளி 3. பார்ப்பவன்
த்ருக் (பெ-ச்) 4. கண் பார்வை

**स्यात् कर्कशः साहसिकः कठोरामसृणावपि ॥ 1418**

1. कर्कशः (पुं/स्त्री/न)

**1. கர்க்கச: (பு-அ)** 1. கெட்டிகாரன்/திறமையுள்ளவன்
கர்க்கசா(பெ-ஆ)2. கடினமானது
கர்க்கச (ந-அ) 3. தயை இல்லாதவன்/இறக்கமற்றவன்
இது அபி என்றதால் பெறப்பட்டது

**प्रकाशोऽतिप्रसिद्धेऽपि ...................**

1. प्रकाशः (पुं/स्त्री/न)

**1. ப்ரகாச: (பு-அ)** 1. புகழ் பெற்றவன்
ப்ரகாசா (பெ-ஆ)
ப்ரகாசம் (ந-அ)
ப்ரகாச: (பு-அ) 2. வெய்யில்

.......................शिशावज्ञे च बालिशः ।

१. बालिशः (स्त्री)

**1. பாலிச: (பெ-அ)** 1. குழந்தை 2. அறிவற்றவன் 3. முட்டாள்-இது அபி சொல்லால் பெறப்பட்டது

कोशोऽस्त्री कुड्मले खड्गपिधानेऽर्थौघदिव्ययोः ॥ 1419

1. कोशः (पुं/न)

**1. கோச: (பு-அ)** 1. அரும்பு 2. கத்திஉரை 3.செல்வப்பெருக்கு

**கோசம் (ந-அ)** 4.திவ்ய ப்ரமாணபேதம் 5.புத்தகம்

"ச" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை

--------ச--------

## अथ षान्तवर्गः

**ஷ வில் முடியும் சொற்கள்**

सुरमत्स्यावनिमिषौ ....................

1. अनिमिषः (पुं)

**1. அநிமிஷ: (பு-அ)** 1. தேவர்கள் 2. மீன்கள்

.......................पुरुषावात्ममानवौ ।

1. पुरुषः (पुं)

**1. புருஷ: (பு-அ)** 1. ஆத்மா 2. மனிதன்

काकमत्स्यात्खगौ ध्वाङ्क्षौ ..............

1. ध्वाङ्क्षः (पुं)

*1. த்வாங்க்ஷ: (பு-அ) 1. காக்கை 2. நாரை (மீன் உண்ணும்பறவை)*

**..................... कक्षौ तु तृणवीरुधौ ॥ 1420**

1. कक्षः (पुं)

*1. கக்ஷ: (பு-அ) 1. புல் 2. கொடி மண்டிய புதர் 3. கக்கம் 4. உலர்ந்த காடு 5. பாபம் இம்மூன்றும் (3-5) சகாரத்தால் பெறப்பட்டன.*

**अभीषुः प्रग्रहे रश्मौ .......................**

1. अभीषुः (पुं)

*1. அபீஷு: (பு-அ) 1. கயிறு 2. கிரணம்*

**................................. प्रैषः प्रेषणमर्दने ।**

1. प्रैषः (पुं)

*1. ப்ரைஷ: (பு-அ) 1. அனுப்புதல் 2. பீடித்தல்*

**पक्षः सहायेऽपि.........................**

1. पक्षः (पुं)

*1. பக்ஷ: (பு-அ) 1. உதவி 2. சுக்ல - க்ருஷ்ண பக்ஷங்கள் 3. இறகு 4. பக்கம் - இம்மூன்றும்(2-4) அபி என்றதால் பெறப்பட்டது.*

**.................... उष्णीषं शिरोवेष्टकिरीटयोः ॥ 1421**

1. उष्णीषः (पुं)

*1. உஷ்ணீஷ: (பு-அ) 1. தலையைச் சுற்றி கட்டும் முண்டாசு முதலியன 2. கிரீடம்*

शुक्रले मूषिके श्रेष्ठे सुकृते वृषभे वृषः ।

1. वृषः (पुं)

*1. வ்ருஷ: (பு-அ) 1. வலிமையுள்ளவன் 2. எலி*
*3. சிறந்தவன் 4. புண்ணியம்*
*5. காளைமாடு*

द्यूतेऽक्षे शारिफलकेऽप्याकर्षो ....................

1. आकर्षः (पुं)

*1. ஆகர்ஷ: (பு-அ) 1. சூதாட்டம் 2. பகடைக்காய்கள்*
*3. சூதாடும் பலகை 4. பொருள்*
*நாடு முதலியன, கவர்தல்-இது அபி*
*என்ற சொல்லால்பெறப்பட்டது*

................................. अथाक्षमिन्द्रिये ॥ 1422

ना द्यूताङ्गे कर्षचक्रे व्यवहारे कलिद्रुमे ।

1. अक्षं (न/पुं)

*1. அக்ஷம் (ந-அ) 1. இந்திரியம்*
*அக்ஷ: (பு-அ) 2. பாய்ச்சிகைகள் 3. 80 குந்துமணியுள்ள*
*எடையுள்ள பொருள்*
*4.வண்டியின் உள்வாய் 5. வ்யவஹாரம்*
*6. பனைமரம்*

कर्षूर्वार्ता करीषाग्निः कर्षूः कुल्याभिधायिनी ॥ 1423

1. कर्षूः (पुं)

*1. கர்ஷூ: (பு-ஊ) 1. விவசாயம் 2. விராட்டி நெருப்பு*
*கர்ஷூ:(பெ-ஊ) 3. நதி*

पुंभावे तत्क्रियायां च पौरुषं ................

1. पौरुषं (न)

*1. பௌருஷம் (ந-அ) 1. ஆண்மை 2. ஆண் இடும் வேலை உத்திரவு*
*3. மனிதனின் கை தூக்கிய உயரம் (ஒரு ஆள் ஆழம் என்பது வழக்கு)*

**..................................विषमप्सु च ।**

1. विषं (न)

*1. விஷம் (ந-அ) 1. தண்ணீர் 2. விஷம் - இது 'ச' காரத்தால் பெறப்பட்டது*

**उपदानेऽप्यामिषं स्याद् ..................**

1. आमिषं (न)

*1. ஆமிஷம் (ந-அ) 1. கப்பம் 2. மாம்சம் - இது 'அபி' என்ற சொல்லால் பெறப்பட்டது*

**......................अपराधेऽपि किल्बिषम् ॥** 1424

1. किल्बिषम् (न)

*1. கில்பிஷம் (ந-அ) 1. அபராதம் 2. பாபம் - இது 'அபி' என்றதால் பெறப்பட்டது*

**स्याद् वृष्टौ लोकधात्र्यंशे वत्सरे वर्षमस्त्रियाम् ।**

1. वर्षं (पुं/न)

*1. வர்ஷ: (பு-அ) 1. மழை 2. உலகம் 3. பாரத வர்ஷங்கள், பூமியின் கண்டங்கள் (தற்போது வழக்கிலுள்ள 5 கண்டங்கள் அல்ல)*
*4. ஆண்டுகள்*

**प्रेक्षा नृत्येक्षणं प्रज्ञा ................**

1. प्रेक्षा (स्त्री)

